*Nam nāṭu*

*Malar 5, itaḻ 103*

*October 12, 1957*

Record no. 1131

REGD. NO. M. 6511 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்

The: "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: புரட்டாசி 26உ சனி (12—10—57) ★ ★ வெளியூர்: புரட்டாசி 27உ ஞாயிறு (13—10—57) [இதழ் 103

## சேலத்தில் காகித ஆலை?

★

சேலம், அக். 12—

சேலத்திலிருந்து 70 மைல் தூரத்திலுள்ள ஒகேனேகல் என்ற இடத்தில் காகித ஆலை ஒன்று ஏற்படுத்த எல்லா வசதிகளும் காணப்படுகின்றன; அங்கு ஆண்டுக்கு 6000 டன் மூங்கில் கிடைக்கிறது; மற்ற வசதிகளும் உள்ளன.

அங்கு காகித ஆலை ஏற்படுத்துவது பற்றி ஆராய நியமிக்கப்பட்டுள்ள குழுவின் தலைவர் தாமஸ் என்பவர் அந்த இடத்தைப் பார்வையிட்டுள்ளார்.

நமது விருப்பத்திற்கு மாறாக இந்தி ஆட்சிமொழி ஆக்கப்பட்டால்.....,

# 'அதனை எதிர்த்து முறியடிப்போம்'

## 'இந்தித் திணிப்பு பெரிய அநீதியாகும்'

## ஆங்கிலத்தின் இடத்தில் இந்தியைப் புகுத்துவது விவேகமற்ற செயல்'

### 'இதனை நாம் சகித்துக்கொள்ள முடியாது--கூடாது'

## 'மாணவர்களும் இந்தியை எதிர்க்க வேண்டும்'

### சி. இராசகோபாலாச்சாரியார் போர் முழக்கம்

சென்னை, அக். 11—

"ஆட்சி மொழியாக இந்தியைத் திணிப்பதானது நிரந்தரமான அநீதி இழைக்கும் கொடிய செயலாகும்; அதனை நாம் சகித்துக் கொண்டிருக்க முடியாது.

"இந்தி நமது விருப்பத்திற்கு மாறாக நம் மீது திணிக்கப்படுமானால், நாம் நமது சக்தி முழுவதையும் திரட்டி அதை எதிர்க்கவேண்டும்"

—என்று, திரு. இராசகோபால ஆச்சாரியார் அவர்கள் போர் முழக்கம் செய்திருக்கிறார்.

தாம்பரம் கிறிஸ்தவக் கல்லூரி மாணவர்களிடை பேசிய ஆச்சாரியார், 'மாணவர்களும் இந்தியை எதிர்க்கவேண்டும்; ஆனால், அதற்காக அரசியல்வாதிகளைப்போல ஆகிவிடக்கூடாது' என்றும் கேட்டுக்கொண்டு அவர் மேலும் குறிப்பிட்டிருப்பதாவது:—

"இந்தி எனக்குத் தெரிந்திருக்குமானால், இங்கு உங்களிடம் பேசுவதைக்காட்டிலும் டில்லியில் போய் பொதுக்கூட்டம் போட்டு, பேசுவேன்; 'இந்தி மொழியின் ஆதிக்கம் கூடாது' என்று இந்தியிலே எடுத்துரைப்பேன்.

"அண்டை மக்களுடன் உறவு கொண்டு வாழ, அந்த மக்களின் மொழியை நாம் விரும்பிக் கற்கலாம்; ஒரு மொழியை விரும்பிக் கற்பதற்கும், அதன் ஆதிக்கத்தை ஏற்பதற்கும் அதிக வேறுபாடு உண்டு.

"நான் முன்பு இந்தி மொழி பற்றிக் கூறியதற்கும் இப்போது கூறுவதற்கும் முரண்பாடு இருப்பதாகவும், முன்னுக்குப்பின் முரணாக நான் பேசுவதாகவும் சிலர் என் மீது குற்றஞ்சாட்டுகின்றனர். என்னைப் பொறுத்தவரையில் நான் முரண்படப் பேசவில்லை. 40 ஆண்டுகளுக்கு முன்புகூட நான், நமது மாநில மக்கள் இந்தியைக் கற்கவேண்டுமென்று கூறினேனே தவிர, ஆட்சி மொழியாக இந்தியை ஏற்கவேண்டும் என்று கூறவில்லை (பலத்த கையொலி).

"அப்படியே நான் தவறு செய்ததாக வைத்துக்கொண்டாலும், 40 ஆண்டுகளுக்கு முன் நான் ஒரு தவறு செய்திருந்தால், இன்று அதனைத் திருத்திக் கொள்ளக்கூடாதா? தொடர்ந்து அந்தத் தவறினைச் செய்ய வேண்டுமா?

"நான், 'இந்தி கற்றுக்கொள்ளுங்கள்' என்று முன்பு கூறினேன்; மக்கள் கேட்கவில்லை.

"நான் முன்பு ஒன்றைக் கூறி அதை மக்கள் கேட்காமல் விடுத்தனர் என்பதால், இப்போது மக்கள் வருந்த வேண்டுமா?

"எனக்கு மக்கள் மீதுள்ள அன்பைக் காட்டிலும் எனது வாதத்தின் மீதுள்ள அன்பு பெரிதல்ல. (பலத்த கையொலி)

"40 ஆண்டுகளுக்கு முன் நாம் எத்தகைய அரசியல் அமைப்பின் கீழ் வாழவேண்டிவரும் என்ற தெளிவு இருக்கவில்லை; ஆனால் இன்று, நிலைமை தெளிவானதாகி விட்டது. நாம் இப்போது ஒரு பெடரல் ஆட்சிமுறையை வைத்துக் கொண்டிருக்கிறோம். இந்த நிலையில் இந்தியை ஆட்சிமொழி ஆக்குவதினால், பலவகையிலும் இந்தி மொழி பேசும் மக்களே நிரந்தரப் பயன் அடைவார்கள். இந்தி பேசாத மக்கள் நிரந்தரமாகப் பின்தங்கிய நிலையிலேயே பிரதிகூலமான நிலையிலேயே இருப்பர். இது மிகப் பெரிய அநீதியாகும். இதை நாம் ஏற்கக் கூடாது; ஏற்க முடியாது.

"என்றுமே உலகில் அநீதிகள் அளவு மீறிப் போகுமானால் அவை அனுபவ சாத்தியமற்றவையாகிவிடும்; வடக்கே வாழ்பவர்கள் விரும்புவதுபோல, இந்தியை நம்மீது ஒருநாளும் திணிக்க முடியாது.

"ஆங்கிலத்தைத் திணிப்பதற்காக பிரிட்டிஷார் செய்ததைப் போல நம்மை ஒரு 200 ஆண்டுக் காலத்திற்கு அடக்கி ஒடுக்கி வைத்திருந்தாலன்றி நாம் இந்தி கற்றுக் கொள்வது என்பது முடியாத காரியம்.

"இந்தி ஆட்சிமொழி ஆக்கப்பட்டால் எல்லாத் துறைகளிலும் அன்று ஆங்கிலேயர் முதலிடம் பெற்றதைப்போல, இந்திமொழிக்காரர்களே ஆதிக்கம் வகிக்க நேரிடும்.

ஆங்கிலேயர்மீதிருந்த நமது கோபம் பறந்துவிட்டது; ஆனால் நாம் கற்ற ஆங்கிலம் நம்முடன் இருந்துவிட்டது. ஆங்கிலம் ஒரு சொத்து அல்ல, அவர்கள் நம்மிடமிருந்து பறித்துக்கொள்ள — அல்லது நாம் அதை இழந்துவிட—அது ஒன்றும் வெள்ளையரின் பாட்டன் வீட்டுச் சொத்துமல்ல!

"வெள்ளையர்கள் நமக்குத் தந்த இரயில்வேயையும், தந்தியையும் நாம் வைத்துக்கொள்ளவில்லையா?

"அதேபோல ஆங்கிலம் நமக்குக் கிடைத்துள்ள அரிய சொத்து; அதனை நாம் இழப்பதற்கில்லை!

"ஆங்கிலம் இன்று வகிக்கும் இடத்திலிருந்து அதனைக் கிழிறக்கிவிட்டு அந்த இடத்தில் இந்தியைப் புகுத்துவதானது, சிந்திக்க முடியாதவர்களின் செய்கை என்பதுடன், முட்டாள்தனமானது மாகும்."

## இந்தியப் பேரரசின் பகற்கனவு

### இந்திக்கு உயிரூட்டத் திட்டங்கள்

### மக்கள் வரிப் பணத்தைப் பாழாக்கும் கொடுமை!

புதுடில்லி, அக். 12—

"இரண்டாவது திட்ட காலத்தில் இந்தியைப் பரப்புவதற்கு இந்தியப் பேரரசு பல திட்டங்களை உருவாக்கியுள்ளது; அவற்றின் சுருக்கம் இங்கு தரப்படுகிறது:—

இந்தியில் கலைச்சொல் அகராதிக்கான இலக்குகளை உருவாக்கி, அகராதி தயாரித்தல்!

கலை நுட்பத் தொழில் பற்றிய நவீன சொற்கள் இந்தியில் இல்லாததால், தற்கால இலக்கியத்திலிருந்து அதுபற்றி ஆராய்ந்து தொகுத்து, இந்தியில் கண்டறிதல்!

பயன்படுத்தப்படும் இந்திச் சொற்கள் பற்றி அடிக்கடி ஆராய்ந்து குறைகளை நீக்குதல்!

இந்தி அறிந்த—அறியாத கல்லூரி மாணவர்களிடையே தொடர்பு ஏற்படுத்த விவாத அரங்கு அமைத்தல்!

இந்தியில் காலட்சேபம் செய்பவர்களுக்கு ஊக்கமளிக்க, இந்தி வழங்காத பகுதிகளுக்கு அவர்களை அனுப்புதல்!

இந்தி வழங்காத பகுதிகளில் ஆசிரியர்கள் விவாத அரங்கு ஏற்படுத்துதல்!

பழைய இலக்கியங்கள் பற்றி ஆராய்தல்!

இந்தி நூல்களுக்கு பரிசு வழங்குதல்!

இந்தி நூல்கள் வெளியிடுவதற்கான ஊக்கம் தருதல்!

இந்தி ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகள் ஏற்படுத்துதல்; இந்தி கற்றுக்கொள்பவர்களுக்கு ஊக்கமளித்தல்!

இதற்கான 'மாதிரி பாடத் திட்டம்' வகுத்தல்!

இதுபோன்ற மேலும் பல திட்டங்களை அமுல் நடத்த மத்திய அரசு தேவையான பணம் செலவிடுமாம்!

மத்தியக் கல்வி அமைச்சர் டாக்டர் மாலி இதனைத் தெரிவித்துள்ளார்.

### 'லோட்டஸ்' இராமசாமி விடுதலையானார்

சென்னை 'லோட்டஸ்' அதிபர் திரு. இராமசாமி தண்டனையை இந்தியப் பிரதம நீதிமன்றம் ரத்து செய்து அவரை விடுதலை செய்யுமாறு உத்தரவு பிறப்பித்துள்ளது.

# திராவிடத்தை மீட்கும் படைக்கு வெற்றி நிச்சயம்

## களம்புக அழைக்கிறார் மு. கருணாநிதி

22—9—57-ல் திருவண்ணாமலையில் நடந்த வ. ஆ. மாவட்ட தி. மு. கழக மாநாட்டில் தோழர் மு. கருணாநிதி எம். எல். ஏ. அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"தி. மு. கழகம் சட்ட மன்றத்திற்குச் சென்றிருப்பது அடுக்கு மொழியிலே அவர்களை மயக்க அல்ல; துடுக்கு மொழியிலே அவர்களைத் துடிக்கவிடவும் அல்ல. திராவிட நாட்டினுடைய மூலாதாரக் கொள்கையை, திராவிட நாட்டு மக்களுக்குத் தேவையானதை, திராவிட நாடு சுதந்திர நலம் பெற எவ்வளவு வேண்டும் என்பதைத் தெரிவிக்கவும், நாடு வாழவும்—நலிவு போகவும்தான் தி. மு. கழகம் சட்ட மன்றத்திற்குச் சென்றிருக்கிறது.

"நாங்கள் அங்கே சென்று திராவிட நாடு வேண்டும் என்று கேட்பதிலே என்ன தவறு? பாவமான செயலா?

"இந்த நாட்டிலே பிறந்தோம்; இந்த மண்ணுக்குரியவர்கள் நாங்கள், இந்த மண்ணிலே பிறந்தோம் — இந்த மண் மாதாவின் மடியிலே தவழ்ந்தோம்—இந்த மண்ணிலேயே சவமாகச் சாகப்போகிறோம்—இந்த மண்ணோடு மண்ணாகத்தான் கிடக்கப்போகிறோம்—நம்முடைய ஒவ்வொரு துளி சாம்பலும்திராவிடநாட்டு மண்ணோடு கலக்க இருக்கிறது.

"அத்தகைய மண்ணுக்குரிய நாம்—அத்தகைய திராவிடத் தாயின் திருச்செல்வங்களாகிய நாம், நம்முடைய மாதாவின் கையிலே இருக்கிற விலங்கை ஒடிப்பதற்கு — அன்னையின் காலிலே பூட்டப்பட்டிருக்கிற தளையை உடைப்பதற்காகச் சட்ட மன்றத்தையும் ஒரு வழியாகக் கருதி, அங்கே திராவிட நாடு வேண்டுமென்று கேட்பது என்ன தவறு?

"பாகிஸ்தான்—பலப்பல இடங்களிலே எடுக்கப்பட்ட மணிகளைக் கொண்டு கோர்க்கப்பட்ட மணியாரம்; ஆனால் திராவிடநாடு—தனியாக எடுக்கப்பட்ட கோகினூர் வைரம்!

"அத்தகைய திராவிடநாடு இந்த மக்களுக்குக்கிடைத்தால் தான்—நம்முடைய ஆட்சியின் கீழ் வந்தால்தான்—திராவிட நாடு திராவிடர்களுக்கு ஆனால் தான், இம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் சுமூகமாக நிறைவேறும்; இந்தி எதிர்ப்பு மாநாட்டில் போட்ட போராட்டத் தீர்மானங்கள் தேவையில்லாத நிலைமையிலேயும்நம்முடைய தமிழ்மொழியை காக்கவுமான சூழ்நிலை இந்த நாட்டிலே ஏற்படும். அத்தகைய சூழ்நிலைக்கு நம்மை எதிரிகள் விரட்டுகிறார்கள்; 'களத்திற்கு வா' என்று அழைக்கிறார்கள்; நாமோ, கட்கமேந்திப் பழக்கப்படாத பரம்பரையல்ல; வாள் ஏந்திப் பழகாதவர்கள் அல்ல! வேலும் வாளும் விளையாட்டுக் கருவிகள் நமக்கு ஒரு காலத்தில்! நம்முடைய தலைவர்களோ போருக்குப் பயப்படுகிறவர்கள் அல்ல; அத்தகையத் தலைவர்களுடைய தலைமையிலே இன்றையத்தினம் தி. மு. கழகம் நடைபோடுகிறது.

"தடைபல உண்டெனினும்—இடர்பல கடக்க வேண்டுமெனினும், அவைகள் அத்தனையையும் இடறியெறிந்து இந்தக் களம் போகும் படை நிச்சயமாகச் செல்லும்—உறுதியாக வெல்லும்—திராவிடத்தை திராவிடர்களுக்கு ஆக்கும்—நிச்சயமாக ஆக்கியே தீரும்—இது உறுதி! உறுதி!! உறுதி!!!"

Best copy available.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 12—10—'57 சனி

# அரிசி பெற்ற காதை!

சென்னை மாநிலத்தில் செயல்பட்டுவரும் நியாய விலைக் கடைகளில் சரிபகுதி மூடிவிடப்படும் என்று அறிவிக்கப்பட்டிருக்கின்றது. இந்தியப் பேரரசு, சென்னைக்கு அரிசி அளித்துவந்ததில் ஏற்படுத்தியுள்ள மாற்றமே இந்த மூடு விழாவிற்குக் காரணம் என்றும் தெரிவிக்கப்படுகிறது.

சென்னை மாநிலத்தில் இதுவரை இருந்துவந்த நியாய விலைக் கடைகள் ஆயிரமேயாகும். சென்னை மாநிலத்தின் பரப்பளவையும், மக்கள் தொகையையும், அரிசித் தேவையையும் கொண்டு மதிப்பிடுவதானால், இவ்வாயிரம் நியாய விலைக் கடைகள் மிகவும் குறைவானது என்பதை அறிவுடையோர் ஒப்பியே தீருவர். இருக்கிற கடைகளே குறைவாக இருக்கின்றன என்கிற பொழுது, இவைகளை ஐந்நூறுக் குறைக்க சென்னை அரசாங்கம் முன்வருவது கண்டு நம்மால் வருந்தாமலும் இருக்க முடியவில்லை — வன்மையாகக் கண்டிக்காமலும் இருக்க முடியவில்லை.

நியாய விலைக் கடைகள் எந்த நோக்கத்திற்காகத் திறக்கப்பட்டனவோ, அந்த நோக்கம் இன்னும் வெற்றிகரமாக நிறைவேறிவிடவில்லை. அன்று இருந்தது போலத்தான் அரிசிப் பற்றாக்குறையும், விலை உயர்வும் இருந்துவருகிறது. பொதுவாக அரிசியின் விலையில் கணிசமான சரிவை ஏற்படுத்த நியாய விலைக் கடைகளால் இயலவில்லையானாலும், மேலும் கூடிவிடாமல் அரிசியின் விலையைக் கட்டுப்படுத்துவதில் நியாய விலைக் கடைகள் பயன் தந்திருக்கின்றன என்பது உண்மையாகும்.

சென்னை மாநிலத்தில் இருந்துவரும் அரிசிப் பற்றாக்குறை என்றும் நிலைத்திருப்பதாகும். புதிய அறுவடைக் காலம் நெருங்கினபோதிலும் கூட, நியாய விலைக் கடைகளுக்கு அப்பொழுதும் இப்பொழுதேபோல் தேவை இருக்கத்தான் இருக்கின்றது.

சென்னை மாநிலத்தின் நெல் விளைச்சலைக் கூட்டுவதற்கு முன்பாக, நியாய விலைக் கடைகளைக் குறைப்பதோ, அறவே மூடிவிடுவதோ விரும்பக்கூடியதாகாது. அச்செயல், பொது மக்களுக்கு மீண்டும் தொல்லை தரும் தீமையாகவே முடிவுறுவது நிச்சயம்.

சென்னை மாநில அரசாங்கம் நியாய விலைக் கடைகளை ஏன் சரிபாதியாகக் குறைத்துவிடுகின்றது எனக் கேள்வி எழுந்தால், தங்களுக்கு அரிசி வழங்கி வந்ததை சரிபாதியாக இந்தியப் பேரரசு குறைத்துவிட்டது—எனவே, தாங்களும் வேறு கதியில்லாது நியாய விலைக் கடைகளில் சரிபாதியை மூடிவிடத் தீர்மானித்து விட்டதாகச் சென்னை அரசாங்கம் ஒப்பாரி வைக்கத் தொடங்கும். அதுவுமின்றி, எஞ்சியுள்ள நியாய விலைக் கடைகளுக்குக் குறைந்த பட்சம் தரக்கூடிய மாதம் ஒன்றுக்கு நாலாயிரம் டன் அரிசியைக்கூட முதற்கண் இந்தியப் பேரரசு கொடுப்பதாக இல்லை —தாங்கள் 'தாள் பணிந்து வணங்கி'க் கேட்ட பிறகுதான் இந்த நாலாயிரம் டன் அரிசியையும் தாராளமாக வழங்க இந்தியப் பேரரசு முன்வந்தது என்றும் சென்னை அரசாங்கம் கண் பிசைந்து கூறக்கூடும்.

இக்குறைந்தபட்ச அரிசி சென்னை மாநிலத்திற்குக் கிடைப்பதும் சோகக் கதையாகும். இவ்வரிசியை இந்தியப் பேரரசு கேரளத்திற்கு வழங்கிவருவதுபோல் சென்னைக்கு ஒன்றும் இனமாக வழங்கிவிடவில்லை. பணத்துக்கும் விற்க முன்வரவில்லை. அரிசிக்கு அரிசி ஈடாகத் திருப்பித்தர வேண்டும் என்ற நிபந்தனையின்மீதுதான், சென்னை அரசாங்கத்திற்கு இக்குறைந்தபட்ச அரிசியையும் கொடுத்துதவ இந்தியப் பேரரசு திருவுளம் கொண்டிருக்கின்றது.

மாதம் ஒன்றுக்கு நாலாயிரம் டன் வீதம் மூன்று மாதங்களுக்குத் தரப்படும் பன்னிரண்டாயிரம் டன் அரிசியையும், புதிய அறுவடையின்போது சென்னை அரசாங்கம் இந்தியப் பேரரசிற்குத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். அப்பொழுது விலையில் ஏற்படக்கூடிய ஏற்றத்தால் ஏற்படுகின்ற நஷ்டம் ஏதாவது இருக்குமானால், அதை சென்னை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான்.

இந்தியப் பேரரசிடமிருந்து சென்னை அரசாங்கம் அரிசி பெற்ற இலட்சணம் இதுதான். இவ்வளவு சங்கடத்திற்குப் பிறகு பெறக்கூடிய அரிசியை, இதுவரை நியாய விலைக் கடைகளில் விற்றுவந்த விலைக்கு விற்க முடியுமா என்றால், அதுதான் முடியாது. கிடைக்கப் போகின்ற அரிசி அமெரிக்காவிலிருந்து இறக்குமதியான அரிசி; இவ்வரிசியை படி ஒன்றுக்கு பதினுன்கணுவிற்கு விற்க வேண்டும்.

நியாய விலைக் கடைகளில் இனி விற்கப்படப்போகின்ற அரிசியை பதினன்கணு விலை கொடுத்து எவரும் வாங்கமாட்டார்கள். அவ்வளவு ஏறிய விலை கொடுத்து வாங்கக்கூடிய வாங்கும் சக்தி பெரும்பான்மையினராக உள்ள ஏழை மக்களுக்கு இல்லவே இல்லை. இந்நிலையில், நியாய விலைக்கடைகளில் அரிசி விலையாகாது தேங்கிவிடும். அவ்வாறு தேங்கிவிடுவதைக் காரணமாகக் காட்டி, எஞ்சியுள்ள நியாய விலைக் கடைகளையும் மூடிவிட நமது சென்னை அரசாங்கம் முன்வந்துவிடும்.

நியாய விலைக் கடைகளில் அரிசி விற்பனையாகாது தேங்கிக் கிடப்பதற்குரிய விலையேற்றத்தைச் சுட்டிக் காட்டாமல் விளைச்சல் கூடிவிட்டது—குறைந்த விலையில் அரிசி ஏராளமாகத் தனியார் கடைகளில் விற்கப்படுகிறது—எனவே, நியாய விலைக் கடைகளுக்கு இனி தேவை இல்லை—மூடிவிடுகிறோம்—என்று கூறி, சென்னை அரசாங்கம் பொதுமக்களை ஏய்க்க முன்வரும்.

குறைந்த விலையில் அரிசி கிடைக்கும்படி செய்யவேண்டுமே என்ற அக்கறை சென்னை அரசாங்கத்திற்கும் கிடையாது —இந்தியப் பேரரசிற்கும் கிடையாது என்ற உண்மையைத்தான் இந்த நியாய விலைக் கடை திறப்பும்—மூடுதலும் உணர்த்துகிறது.

## தென் மண்டலம் முன்னணியில் நிற்கிறது!

சென்னை, அக். 10—

இந்தியாவில், சென்னை உள்ளிட்ட தென் மண்டலம்தான் செப். 23-ந் தேதி வரை அதிகமான அளவுக்கு ஆயுள் இன்ஷ்யூரன்சு செய்துள்ளதாம்!

ரூ. 75 கோடி இலக்கில் ரூ. 39 கோடிக்கு தென் மண்டலத்தில் பேரம் பூர்த்தி செய்யப்பட்டுள்ளதாகக் கூறப்பட்டிருக்கிறது.

வடக்கு மண்டலம் ரூ. 40 கோடி இலக்கில் ரூ. 18 கோடிக்கும்; மத்திய மண்டலம் ரூ. 50 கோடி இலக்கில் ரூ. 18 கோடிக்கும், கிழக்கு மண்டலம் ரூ. 64 கோடி இலக்கில் ரூ. 30 கோடிக்கும், மேற்கு மண்டலம் ரூ. 75 கோடி இலக்கில் ரூ. 20 கோடிக்கும், மட்டுமே இன்ஷ்யூரன்சுகள் செய்துள்ளனவாம்!

## அபிவிருத்தித் திட்டங்கள் பற்றி இசை அரங்குகளாம்!

### தென்னாட்டு மொழி நாடகங்களுக்கு இந்தி விளக்கவுரையாம்!

பெங்களூர், அக். 9—

தென்னாட்டில் உள்ள எல்லா வானொலி நிலையங்களிலிருந்தும் தென்னாட்டின் நான்கு மொழிகளிலுமான நாடகங்களை ஒலிபரப்புவதென்று நேற்று திருவனந்தபுரத்தில் நடைபெற்ற தென் மண்டல வானொலி அதிகாரிகளின் கூட்டம் ஒன்றில் முடிவு செய்யப்பட்டிருக்கிறதாம்.

அதோடு, அபிவிருத்தித் திட்டங்கள் பற்றி இசை அரங்குகளும், வானொலி மூலம் நடத்த ஏற்பாடு செய்யப்படுமாம்.

மேலும், தென்னிந்திய நாடகங்கள் போன்ற நிகழ்ச்சிகளை இந்தி வார்த்தைகளுடன் ஒலிபரப்புவதெனவும் முடிவாகியுள்ளதாம்!

## தாம்பரம் - விழுப்புரம் மின்சார இரயில் பாதை

புதுடில்லி, அக். 8—

"வெளிநாட்டுச் செலாவணி நெருக்கடி காரணமாக இரயில்வேக்களின் அபிவிருத்தித் திட்டம் எதும் பாதிக்கப்படமாட்டாது" என்று இப்போது இரயில்வே அமைச்சராக உள்ள செகஜீவன்ராம் நிருபர்களிடம் தெரிவித்துள்ளார்.

இரண்டாவது திட்டத்தில் இரயில்வே அபிவிருத்திக்காக 1,125 கோடி ஒதுக்கப்பட்டதாம்; ஆனால் இப்போது மேலும் ரூ.200 கோடி தேவைப்படுகிறதாம்; சாமான் போக்கு - வரத்திற்கு அதிக வசதி ஏற்படச் செய்ய மேலும் ரூ. 100 கோடி தேவைப்படுகிறதாம்.

மொத்தம் ரூ. 400 கோடிக்கு வெளிநாட்டுச் செலாவணி தேவைப்படும் என்று கருதப்படுகிறது.

சென்னை—கடற்கரையிலிருந்து தாம்பரம் வரையில் மின்சார இரயில்கள் 'நேரடி மின்சார' சக்தி (டி. சி.) மூலம் இயங்குகின்றன. எனவே, தாம்பரத்திலிருந்து விழுப்புரம்வரையில் அமைக்கப்படவிருக்கும் மின்சார இரயில்பாதையில் விடப்படும் மின்சார இரயில்களை 'நேரடி மின்சாரம்' மூலம் இயக்குவதா அல்லது 'குவிக்கப்பட்ட மின்சக்தி' (ஏ. சி.) மூலம் இயக்குவதா என்று ஆராயப்படுகிறதாம்.

'இரண்டாவது திட்டக் காலத்திற்குள் இந்தத் திட்டம் நிச்சயம் நிறைவேற்றப்படும்' என்று இப்போது பதவியிலிருக்கும் இரயில்வே அமைச்சர் கூறிவிட்டார்.

மின்சார பாதை அமைப்பு முடியும் வரையில் 'டீசல்' மின்சார வண்டிகள் விட முடிவு செய்யப்பட்டு 100 எஞ்சின்களுக்கு 'ஆர்டர்' தரப்பட்டுள்ளதென்றும், 20 எஞ்சின்கள் விரைவில் வந்து சேருமென்றும், 826 மைல்களிலிருந்து 1,300 மைல்களுக்கு உள்ள பாதை அதிகப்படுத்தப்படுமென்றும் கூறப்பட்டிருக்கிறது.

சென்னை, பம்பாய் மாநிலங்களில் மின்சார வசதிக்கு சங்கடம் எதும் இல்லையாம்; ஆனால் தேவைப்படும் கம்பிகளை வெளிநாட்டுச் செலாவணி வசதியுடன் சென்னை அரசாங்கம் பெற முடியவில்லை என்ற நிலையை மத்திய அரசாங்கம் உருவாக்கியுள்ளதாம்.

## உலகில் கல்வி அறிவற்றோர் தொகை

### மக்கள் தொகைப் பெருக்கத்தால் அதிகரிப்பதாகத் தகவல்

நியூயார்க், அக். 9—

"உலக மக்களில், மூன்றில் இரு பகுதியினருக்கு எழுதப்படிக்கத் தெரியாது"

என்று, ஐ. நா. தகவல் ஒன்று கூறுகிறது.

எழுதப்படிக்கக் கற்றுவரும் மக்களின் எண்ணிக்கை அதிகரித்து வந்தபோதிலும், சமீபத்திய எதிர்காலத்தில், உலகில் படிக்காதவர்களின் எண்ணிக்கை குறைவதற்கு மாறாக அதிகரிக்கும் என்று கருதத்தக்க அளவுக்கு மக்கள் தொகை அதிகரித்து வருவதாகவும் அந்த ஐ. நா. அறிக்கை கூறுகிறது.

இந்தத் தகவலைப் பத்திரிகையாளருக்குத் தந்த 'யுனெஸ்கோ'வின் டைரக்டர்-ஜெனரலான டாக்டர் லூதர் ஏவான்ஸ் குறிப்பிட்டதாவது:—

"அறியாமைக்கு எதிராக நாம் மிகச் சுருக்கமாகவே முன்னேறியுள்ளோம்; உலகில் மூன்றில் ஒரு பகுதி மக்கள்தான் இன்று ஒரு பத்திரிகையைப் படித்துப் புரிந்துகொள்ளக்கூடியவர்களாக இருக்கின்றனர்.

"இன்று உலகில் 70 கோடி பேருக்கு மேல் கல்வியறிவு அற்றவர்களாயுள்ளனர். இந்தத் தொகை அதிகரிக்காமலிருக்க நாம் மூன்று வழிகளைக் கையாள முடியும். உலக மக்கள் தொகை அதிகரித்து வரும் விகிதத்தைக் குறைப்பது, ஆரம்பப்பள்ளிகளில் படிப்போர் தொகையை அதிகரிப்பது, அவசர நடவடிக்கைகள் மூலம் வயது வந்தோரிடை நிலவும் கல்லாமையைக் குறைப்பது என்பவையே அந்த மூன்று வழிகளாகும்."

## இந்தியாவில் மக்கள் தொகையும் வேலை வாய்ப்பும்!

### பிர்லா வெளியிடும் உண்மைகள்

நியூயார்க், அக். 5—

"இந்தியாவின் மக்கள் தொகை 38 கோடியாகும்; ஆண்டு தோறும் இத்தொகை 50 இலட்சமாகப் பெருகிக் கொண்டே வருகிறது; ஆனால், இந்தியாவிலுள்ள தொழிற்சாலைகளில் மொத்தம் 40 இலட்சம் பேர்களுக்கு மட்டுமே வேலை வாய்ப்புப்பெறும் நிலை உள்ளது; மொத்த மக்கள் தொகையில் இது 1 சத விகிதம் ஆகும்.

'இந்தியத் தொழில்களில் ஊதியம் தேடும் ஒவ்வொருவருக்கும் 5 பேர் கொண்ட குடும்பம் இருப்பதாக மதிப்பிட்டால் மொத்தம் 2 கோடி மக்கள் மட்டுமே தொழில்களை நம்பி வாழ்பவர்களாகின்றனர். இந்தியாவில் தாங்கமுடியாத அளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் உள்ளது.

"டாலர் மதிப்பில், இந்தியாவில் வாழும் தனி நபரின் வருமானத்தை மதிப்பிட்டுப் பார்க்கும்போது ஆண்டுக்கு 60 டாலராக மட்டுமே உள்ளது; இது, ஒரு அமெரிக்க நபருக்குக் கிடைப்பதில் 1/35 பகுதியாகும்.

"இந்தியரின் வாழ்க்கைக் காலம் 35 ஆண்டுகளாக உயர்ந்துள்ளது; இதனால் சிக்கல் மேலும் அதிகரித்துள்ளது.

"ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான இந்தியர்கள் பட்டப் படிப்புப் பட்டம் பெற்று வெளியேறுகின்றனர். அவர்களின் வேலைத் தேடும் படலமும், அவர்கள் அடைந்துவரும் வெறுப்புணர்ச்சியும் இன்றைய இந்தியாவுக்கு உள்ள பெரிய ஆபத்தாகும்"

என்று, வடநாட்டுத் தொழில் அதிபர் ஜி. டி. பிர்லா அமெரிக்காவில் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் அவர், இந்திய மக்களின் உணவு நல்ல சத்துள்ளதாக—'தரம்' உள்ளதாக இருக்கவில்லை என்ற உண்மையை வெளிப்படுத்தி, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலம் வேலைத் தேடித்தரும் வாய்ப்பை உயர்த்த இயலவில்லை என்றும் கூறியுள்ளார்.

## 1,66,100 வழக்குகள்!

1956 டிசம்பர் 31-ந் தேதிவரையில் இந்தியாவிலுள்ள 13 நீதிமன்றங்களில் மொத்தம் 1,66,100 வழக்குகள் விசாரணை நிலையில் இருந்துள்ளன என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

1953 முதல் முடியாமல் இருக்கும் வழக்குகள் 39,228 என்றும் கூறப்படுகிறது.

சென்னைமாநிலத்தில் 1953-க்கு முன்னிலிருந்து 1,000 வழக்குகளும், 1956 டிசம்பர் 31-ந் தேதி வரை முடியாத வழக்குகள் மொத்தம் 1,500 என்றும் மதிப்பிடப்பட்டுள்ளது.

சென்னை, அக். 11—

பெரம்பூர் அருந்ததியார் தோல் தொழிலாளர் கூட்டுறவு சங்கத்திற்கு ரூ. 1,80,000 கடனாகவும், நெல்லை மாவேலை நிறுவனத்திற்கு ரூ. 40,000 கடனும் அரசாங்கம் அளித்துள்ளது.

## சேலத்தில் கல் அரைக்கும் தொழிற்சாலையாம்!

### இந்தியப் பேரரசு கடன் தர முன்வருகிறதாம்!

சென்னை, அக். 9—

கண்ணாடித் தொழிலுக்குத் தேவைப்படும் இரும்புச் சத்து கலக்காத நல்லரக மணல் சென்னை மாநிலத்திற்குக் கிடைக்கச் செய்ய சேலத்தில் ஸ்படிகக் கற்களை உடைத்து மணலாக அரைக்கும் சாலை ஒன்று துவக்கப்படவிருக்கிறது.

இதற்கு மத்திய அரசாங்கம் ரூ. 1 இலட்சம் கடன்தர முன்வந்துள்ளதாம். இதற்கு மொத்தம் ரூ 4. இலட்சம் செலவாகும் என்றும் கருதப்படுகிறது.

ஆண்டொன்றுக்கு 9,000 டன் கற்களை பொடியாக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.



# திராவிடத் தலைநகர் போர்க்கோலம் பூணுகிறது!

## வட்டந்தோறும் இந்தி எதிர்ப்பு ஊர்வலங்கள்--கடற்கரையில் மாபெரும் பொதுக்கூட்டம்

★

இந்தி எதிர்ப்பு நாளையொட்டி, 13-10-57-ல், சென்னை நகரில் நடக்கவிருக்கும் ஊர்வலங்கள், கூட்டங்களின் விவரம் அடியில் தரப்படுகிறது :—

**1-வது வட்டம் :**

காலை 8-30 மணியளவில் தோழர் க. பட்டாபி தலைமையில் புதுவண்ணையம்பதி அண்ணா படிப்பகத்திலிருந்து ஊர்வலம் புறப்பட்டு முதல் வட்ட தி.மு.க. கிளையின் பணிமனையில் முடிவடையும்.

**2-வது வட்டம் :**

காலை 9 மணியளவில், 2-வது வட்ட தி. மு. க. கிளை, மக்கள் முன்னேற்ற மன்றம், திராவிட நற்பணி மன்றம், நெடுஞ்செழியன் பகுத்தறிவு மன்றம் ஆகியவை சார்பில் தோழர் என். சிவரத்தினம் தலைமையில் கிளைக் கழகப் பணிமனையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு இராயபுரம் முக்கிய தெருக்களில் செல்லும்

**4-வது வட்டம் :**

காலை 8 மணிக்கு வண்ணை, மணிகண்ட முதலித் தெரு, 6-வது சந்து இளைஞர் முன்னேற்ற மன்றத்திலிருந்து தோழர் கே.எஸ். அருணாசலம் தலைமையில், சேர—சோழ—பாண்டியர்கள் இரதத்தில் முன்செல்ல, முரசு ஒலிக்க, தாரைகள் முழங்க ஊர்வலம் புறப்பட்டு, 3, 4-வது வட்டங்களிலுள்ள முக்கிய வீதிகளின் வழியே சென்று, மூலக்கொத்தளம் தாளமுத்து - நடராசன் கல்லறையிலிருந்து புறப்படும் ஊர்வலத்தில் கலந்துகொள்ளும்.

**7-வது வட்டம் :**

காலை 8 மணிக்கு, அழகிரி மன்றம், டாக்டர் அம்பேத்கார் மன்றம் ஆகியவை சார்பில் ஊர்வலம் (அழகிரி மன்றத்திலிருந்து) புறப்பட்டு, வட்டத்தின் முக்கிய வீதிகளின் வழியே சென்று மூலக்கொத்தளத்திலுள்ள தாளமுத்து-நடராசன் கல்லறையை அடைந்து முடிவுறும்.

**8-வது வட்டம் :**

காலை 8 மணிக்கு, தி. மு. க. கிளை, திருவள்ளுவர் முத்தமிழ்க் கழகம், மக்கள் மன்றம், மற்றும் கழகச் சார்புடைய அமைப்புகள் சார்பில், பெத்துநாய்க்கன் பேட்டை காசி விசுவநாதர் கோயில் திடலிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, வட்டத்தின் முக்கிய வீதிகளின் வழியே செல்லும்.

**11-வது வட்டம் :**

காலை 7 மணிக்கு, எண். 4/188-ஏ, பிராட்வே தி. மு. கழகப் பணிமனையிலிருந்து கொட்டு முரசத்துடன் ஊர்வலம் புறப்பட்டு வட்ட முழுமையும் சுற்றிவரும்.

**16-வது வட்டம் :**

காலை 7 மணிக்கு தி. மு. க. பணிமனையிலிருந்து தோழர் சி. பஞ்சாட்சரம் தலைமையில் ஓர் மாபெரும் ஊர்வலம் புறப்பட்டு முக்கிய வீதிகளின் வழியே செல்லும்; இந்தி எதிர்ப்புத் தீர்மானமும் நிறைவேற்றப்படும்,

**17-வது வட்டம் :**

காலை 8-மணியளவில், கிளை தி. மு. கழகப் பணிமனையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, வட்டத்தின் முக்கிய வீதிகளின் வழியே செல்லும்; வட்டத்திலுள்ள எல்லா மன்றங்களும், படிப்பகங்களும் பங்கு கொள்ளும்.

**24-வது வட்டம் :**

காலை 8 மணியளவில் சென்னை குயப்பேட்டை சிந்தனைச் சிற்பி சிங்காரவேலர் மன்றத்தில் ஊர்வலம் ஆரம்பித்து, அதில் கலந்துகொள்ளும் மன்றங்கள் வழியாகச் சென்று இறுதியாக திரு. வி. க. மறுமலர்ச்சி மன்றத்தில் முடிவுறும்.

**27-வது வட்டம் :**

காலை 8 மணியளவில் கழகப் பணிமனையிலிருந்து தோழர் கே. ஏ. இராமநாதன் தலைமையில் ஓர் மாபெரும் ஊர்வலம் புறப்பட்டு, வட்டத்தின் முக்கிய வீதிகளில் செல்லும்.

**35-வது வட்டம் :**

காலை 8 மணிக்கு கிளைக் கழகப் பணிமனையிலிருந்து பல மன்றங்களும் கலந்துகொள்ளும் ஓர் சைக்கிள் ஊர்வலம் வட்டத்தின் முக்கிய வீதிகளின் வழியாகச் சென்று அறிவு வளர்ச்சி மன்றத்தில் வந்து முடியும்.

**40-வது வட்டம் :**

காலை 8 மணிக்கு பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார் தலைமையில் கழகப் பணிமனையிலிருந்து, வட்டக் கிளை சார்பிலும், நடேசன் மன்றம், தமிழ் வளர்ச்சி மன்றம், அழகிரி நினைவு மன்றம், சாமி படிப்பகம், தோழமைக் கழகம் ஆகிய அமைப்புகள் சார்பிலும் ஊர்வலம் புறப்பட்டு வட்டத்தின் முக்கிய வீதிகளின் வழியே செல்லும்.

**46-வது வட்டம் :**

காலை 8 மணிக்கு தேனாம்பேட்டை மக்கள் முற்போக்கு மன்றப் பணிமனையிலிருந்து தோழர் கை. பிரமையா தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு பல முக்கிய வீதிகள் வழியாகச் சென்று திருவள்ளுவர் சாலை தி. மு. க. பணிமனையில் வந்தடையும்; அங்கு கூட்டம் நடைபெறும்.

**47-வது வட்டம் :**

காலை 7 மணிக்கு, திரு. வி. க. மன்றத்திலிருந்து தோழர் தணிகாசலம் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு ஏரிக்கரை, தியாகராயர் ரோடு, உஸ்மான் ரோடு, பஸ் நிலையம், பல்லவ நகர், சி. ஐ. டி. நகர் வழியாகச் சென்று சைதை அடையும்.

**சென்னை—ஆலந்தூர் :**

மாலை 3 மணிக்கு தோழர் நல்லபெருமான் தலைமையில் முத்துக்குமாரசாமிசாலை, கோயில் தெரு ஆரம்பப் பாடசாலை அருகிலிருந்து ஊர்வலம் புறப்படும்.

## மாற்றம்

22—10—57-ல், நீரளூரில் நடைபெற இருந்த கூட்டம், 24—10—57-க்கு மாற்றப்பட்டிருக்கிறது.

அன்று மாலை 5 மணிக்கு, நீரளூர்கிராமப்பள்ளிக் கட்டடத் திறப்புவிழா நடைபெறும். செங்கற்பட்டு மாவட்ட ஆட்சி மன்றத் தலைவர் திரு. கோவிந்தராசுலு எம். பி. அவர்கள் தலைமை வகிப்பார்.

அண்ணு, காஞ்சி-அ. க. தங்கவேலர், சி. வி. எம். அண்ணுமலை ஆகியோர் பேசுவர்.

## தென் திருப்பேரையில் தி. மு. க. பொதுக்கூட்டம்

தென்திருப்பேரை தி. மு. கழகச்சார்பில் 26—9—57-ல், திருவை வழக்கறிஞர் தோழர் டி. செவந்தி தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தலைவர் உரைக்குப்பின் கே. சுப்பையா, நெல்லை அசாகி, வழக்கறிஞர் தோழர் எஸ் தங்கத்துரை, திருவை தோழர் ஆ. அண்ணமலை, வழக்கறிஞர் தோழர்எஸ். இரத்தினவேல்பாண்டியன் ஆகியோர் கழகக்கொள்கைகளை விளக்கிப் பேசினர்கள்.

## திருச்சி இ. புதூர் தி.மு.க. கிளை துவக்கவிழா

13—10—57 மாலை 5 மணியளவில் திருச்சி இடமலைப்பட்டி புதூர் தி. மு. கழகக் கிளையின் துவக்கவிழா நடுத்தெரு அரசமரத்தடியில் தோழர் மு. செல்லமுத்து தலைமையில் நடைபெறும். தோழர் மு. கருணநிதி துவக்கிவைப்பார்; தோழர் அன்பில்-தர்மலிங்கம் கொடியேற்றுவார்; தோழர்கள் எம். எஸ். மணி, எஸ். நெடுமாறன் பேசுவர்.

## இந்தி எதிர்ப்பு நாள்—

### தாய்மார்களுக்கு வேண்டுகோள்

தி. மு. க. பொதுச்செயலாளர் அவர்கள் அறிக்கைக்கிணங்க அக்டோபர் 13; ஞாயிற்றுக் கிழமையன்று, தமிழர்களின் நலத்தை—எதிர்கால வாழ்வைப் பாழாக்கும் வகையில் டெல்லி ஏகாதிபத்தியம் வஞ்சகமாகத் திணிக்கும் இந்தியைக் கண்டிக்கும் வகையில் இந்தி எதிர்ப்புநாளை மகளிர் மன்றக் கிளைகள் அனைத்தும் சிறப்பானமுறையில் நடத்த வேண்டுமேனக் கேட்டுக் கொள்கிறேன்.

அன்றையத்தினம் தி. மு. க. தோழர்கள் நடத்தும் ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்களில் மகளிர் மன்றத் தோழியர்கள் சிறப்பான அளவில் கலந்துகொள்வதன் மூலம் தாய்மார்களின் கண்டனக் குரலை எழுப்பவேண்டுமென வேண்டிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சத்தியவாணிமுத்து
தலைவர்
மகளிர் மன்றம்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

## சென்னையில் இந்தி எதிர்ப்பு நாள்

# பொதுக்கூட்டம்

★

13—10—57 மாலை 6-மணிக்கு

**திருவல்லிக்கேணி கடற்கரையில்**

★

தலைவர் : **கோ. செங்குட்டுவன்**

பேசுவோர் :

**ஈ. வெ. கி. சம்பத் M. P.**

மற்றும் பலர்.

—சென்னை மாவட்ட தி. மு. கழகம்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

**சென்னை—28வது வட்ட தி.மு.க. செயற்குழு உறுப்பினர்கட்கு :**

12—10—57 இரவு 7 மணிக்கு சென்னை—பூங்காநகர் (28-வது வட்டம்) தி. மு. க. கிளையின் செயற்குழுக் கூட்டம், காளப்ப ஆச்சாரி தெரு 5 எண்ணுள்ள இல்லத்தில் நடைபெறும். அவ்வமயம் பல முக்கிய பிரச்சினைகள் ஆய்வுக்குவரும்.

## சென்னை மாவட்டத் தி. மு. கழகத் தோழர்களுக்கு:

அக்டோபர் 13—' இந்தி எதிர்ப்பு நாளை' ஒட்டி, அன்று பிற்பகல் 2 மணிக்கு மூலக்கொத்தளத்திலுள்ள தாளமுத்து-நடராசன் கல்லறையிலிருந்து துவங்க இருக்கும் மாபெரும் ஊர்வலத்தை, முன்னுள் மாவட்டச் செயலாளர் தோழர் கே. கோவிந்தசாமி அவர்கள் தலைமை வகித்து, கீழ்க்கண்ட தெருக்கள் வழியாக நடத்திச் செல்வார்கள் :—

T. H. ரோடு, பழைய ஜெயில் ரோடு, இப்ராகிம்ஜி சாயபு தெரு, தம்பு செட்டி தெரு, எர்ரபாலு செட்டி தெரு, அண்ணுபிள்ளை தெரு, ஆயுதப்ப நாய்க்கன் தெரு, ஆனைகவுனிவாராவதி, சூளைஐரோடு, அவதானம்பாப்பய்யர் தெரு, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு. கரியப்ப முதலித் தெரு, தாணுத் தெரு, புரசைவாக்கம் ஐரோடு, வெள்ளாளத் தெரு, ப்ளவர்ஸ் ரோடு, பூந்தமல்லி ஐரோடு, கெங்குரெட்டி ரோடு, எழும்பூர் ஐரோடு, டி. எம். நாயர் ரோடு, பாந்தியான் ரோடு, அருணசல நாய்க்கன் தெரு, சாமிநாய்க்கன் தெரு, கூவம் ரோடு, வாலாஜா ரோடு, திருவல்லிக்கேணி ஐரோடு,பைக்ராப்ட்ஸ் ரோடு வழியாகச் சென்று பொதுக் கூட்டம் நடைபெறும் திருவல்லிக்கேணி கடற்கரையையடையும்.

கோ. செங்குட்டுவன்
துணைச் செயலாளன்
(சென்னை மாவட்ட தி. மு. க.)

## தூத்துக்குடியில் சிறப்புக் கூட்டம்

13—10—57 மாலை 4-மணியளவில், தூத்துக்குடி டேல்பின் தியேட்டரில் தோழர் இரா. கிருட்டினன் தலைமையில் தோழர்கள் க. அன்பழகன் எம். எல். ஏ., சி. பி. சிற்றரசு ஆகியோர் பேசுவர்.

## நாஞ்சில் மாவட்ட தி.மு.கழகக் கிளைத் தோழர்கட்டு :

18—10—57 வெள்ளியன்று மாலை 6 மணிக்கு நாஞ்சில் மாவட்ட மாநாட்டு வரவேற்புக் குழுக் கூட்டம் கழக அலுவலகத்தில் நடைபெறும். அதுபோது, வரவேற்புக் குழு உறுப்பினர்கள் அனைவரும் தவறாது வருகைதர வேண்டுவதோடு, செலுத்தவேண்டிய கட்டணத் தொகை ரூ. 5 இன்னும் செலுத்தாமல் இருக்கும் தோழர்கள் அன்றைக்கு சிரமம் பாராமல் கொண்டுவரக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அன்றையக் கூட்டத்தில் ஆய்வுக்கு வரும் விஷயங்கள் :—

1. வரவேற்புக்குழுத் தலைவர், செயலாளர், பொருளாளர் தேர்வு.
2. மாநாட்டுத் தலைவர், திறப்பாளர் நிர்ணயித்தல்.
3. இதர விஷயங்கள்.

அன்பன்,
கி. மனோகரன்
செயலாளர்
நா. மா. தி. மு. கழகம்

## இந்தி எதிர்ப்புக் கூட்டங்கள்

### சென்னையில்

**மயிலை :**

13—10—57 காலை 10 மணியளவில், 7, விருப்பாட்சீசுவரர் கோயில் தெரு, திரு. வி. க. பகுத்தறிவு மன்றத்தில் தோழர் சுரதா அவர்கள் தலைமையில் நடைபெறும். தோழர்கள் பொன். கு. கோதண்டபாணி, பி. இராமசாமி, பொ. இரத்தினவேல், வெ. இராமமூர்த்தி ஆகியோர் பேசுவர்.

**மீனாட்சியம்மன்பேட்டை:**

13—10—57 காலை 8 மணிக்கு, வடசென்னை தாளமுத்து - நடராசன் முன்னேற்ற மன்றத்தில் தோழர் அன்பானந்தன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் இளஞ்சேரன், அன்புரோசு, மதிவாணன், இக்பால் ஆகியோர் பேசுவர்.

**6-வது வட்டம் :**

காலை 8 மணிக்கு தி. மு. கழகப் பணிமனையில் தோழர் க. சிதம்பரம் தலைமையில் நடைபெறும்; தோழர்கள் பலர் பேசுவர்.

**15-வது வட்டம் :**

13—10—57 காலை 9 மணிக்கு, நாட்டுப்பிள்ளையார் கோவில் தெரு, 77/78 எண்ணுள்ள கழக மனையில் தோழர் அ. ஆனந்தன் தலைமையில் நடைபெறும்; தோழர்கள் பலர் பேசுவர்.

**19-வது வட்டம் :**

காலை 8 மணியளவில், தி. மு. கழகச் சார்பில் வாழைமாநகர் வள்ளுவர் மன்றத்தில், தோழர் டி. நடராசன் தலைமையில் கூட்டம் நடைபெறும்; தோழர்கள் பலர் பேசுவர்.

**35-வது வட்டம் :**

காலையில் இந்தி எதிர்ப்பு ஊர்வலம் முடிந்ததும், கோடம்பாக்கம் அறிவு வளர்ச்சி மன்றத்தில் தோழர் ச. நெடுமாறன் தலைமையில் கூட்டம் நடைபெறும்; தோழர்கள் பலர் பேசுவர்.

**37-வது வட்டம் :**

காலை 8-30 மணியளவில் தி. மு. க. பணிமனையில் தோழர் ம. கி. இராமலிங்கம் தலைமையில் நடைபெறும்; தோழர்கள் பலர் பேசுவர்.

**சென்னைக் கல்விச் சங்கம்**

13—10—57 மாலை 5 மணிக்கு, பட்டாளம் ஸ்டாரன்ஸ் ரோடு ஆண்கள் பள்ளியில் மேற்படி சங்கச் சார்பில் "குறள்நெறி" என்னும் பொருள் குறித்து திரு. கு. வே. இராமகோடி தலைமையில் திரு. வ. சுப்பிரமணியம் பேசுவார்.

# அக். 13: இந்தி எதிர்ப்பு நாள்

## நாடெங்கும் கழக முன்னணி வீரர்கள் முழக்கம்

| | | |
|---|---|---|
| அண்ணா | — | கோவை |
| இரா. நெடுஞ்செழியன் | | சேலம் |
| என். வி. நடராசன் | — | திருப்பத்தூர் |
| ஈ. வெ. கி. சம்பத் | — | சென்னை |
| கருணாநிதி, அன்பில்-தருமலிங்கம், எம். எஸ். மணி, எஸ். நெடுமாறன் | — | திருச்சி |
| க. அன்பழகன், சி. பி. சிற்றரசு | — | தூத்துக்குடி |
| கே. ஏ. மதியழகன், காஞ்சி-கல்யாணசுந்தரம், கே. கே. நீலமேகம் | — | குடந்தை |
| ஏ. வி. பி. ஆசைத்தம்பி | — | தஞ்சை |
| கி. மனோகரன் | — | மதுரை |
| இரா. செழியன், ஈழத்தடிகள் | — | காஞ்சி |
| அருணகிரி நாதர் | — | குன்றத்தூர் |
| இரெ. இளம்வழுதி, எம். பி. சுப்பிரமணியம், டி. இருசப்பன் | — | ஆத்தூர் |
| கண்ணதாசன், ஏ. கோவிந்தசாமி | — | வளவனூர் |
| மதுரை எஸ். முத்து | — | உசிலம்பட்டி |
| என். எஸ். இளங்கோ | — | பாண்டமங்கலம் |
| சி. வி. எம். அண்ணாமலை | — | கவசம்பட்டு |
| எஸ். அப்பாவு | — | மல்லூர் |
| க. அறிவழகன் | — | திண்டிவனம் |
| ப. கண்ணன் | — | ஏத்தாப்பூர் |
| காஞ்சி-மணிமொழியார் | — | பெரியகுப்பம் |
| என். சீவரத்தினம் | — | செங்கற்பட்டு |
| ஆர். எஸ். பாண்டியன் | — | எளம்பிள்ளை |
| எஸ். எஸ். தென்னரசு | — | ஆரணி |
| எம். பி. சாரதி | — | வேலூர் |

## கழகக் கூட்டங்கள்

★

**பொள்ளாச்சி:**
14—10—57 இரவு 9½ மணிக்கு
பேசுவோர்:
**அண்ணா**
ஈ. வெ. கி. சம்பத்
இன்னிசை: சகநாதன் குழுவினர்

★

**மீஞ்சூர்:**
கடை வீதியில்
14—10—57 மாலை 6 மணிக்கு
தலைவர்: எம். அப்துல்லா
பேசுவோர்:
ஆர். எஸ். பாண்டியன்
டி. யுகந்தன், நாதம்
டி. இராமசாமி
என். வி. தங்கசாமி
எஸ். எஸ். பாண்டியன்
இராதாமணாளன், இராசன்

**முக்கூடல்:**
காந்தி திடலில்
14—10—57 இரவு 8 மணிக்கு
தலைவர்: மா. சு. முத்துக்குட்டி
பேசுவோர்:
க. அன்பழகன் எம்.எல்.ஏ.
டி. சிவந்தி, அன்புமணி

★

**மேல்பட்டாம்பாக்கம்:**
14—10—57 மாலை 6 மணிக்கு
தலைவர்:
ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ.
பேசுபவர்:
சிற்றுளி-சுப்பிரமணியம்

★

**நங்கவள்ளி:**
கலைவாணர் திடலில்
14—10—57 இரவு 7 மணிக்கு
தலைவர்: ப. கண்ணன்
பேசுவோர்:
என். எஸ். இளங்கோ
பாவு, க. கு. சின்னுசாமி



# போர் முரசு ஒலிக்கிறது!

## அக். 13: இந்தி திணிப்பை எதிர்த்து நாடெங்கும் கண்டனக் குரல்

★

**காஞ்சீபுரம்:**
தலைவர்: ஈழத்தடிகள்
பேசுவோர்:
இரா. செழியன், வெ. சம்பந்தம், டி. சீனிவாசன்
மாலை 4 மணிக்கு 'திராவிட நாடு' நிலையத்திலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்படும்.

★

**புதுக்கோட்டை:**
தலைவர்: க. வீரய்யா
பேசுவோர்:
சின்னராசா தங்கவடிவேல்
க. ஞானமுத்து, பா. செழியன்,
பொன்னுசாமி, இராசகோபால்
மாலை 4-மணிக்கு பஸ் நிலையத்திலிருந்து ஊர்வலம் புறப்படும்.

★

**திருவள்ளூர்:**
தலைவர்: ஆர். ஏ. ரசாக்
பேசுவோர்:
பி. இளமாறன், எச். ஏ. கனி
மாலை 4-30 மணிக்கு, கழகக் கட்டிடத்திலிருந்து தோழர் இராகவன் தலைமையில் மாபெரும் ஊர்வலம் புறப்படும்.

★

**மணமேல்குடி:**
தலைவர்: அகமத் தம்பி
பேசுபவர்:
பெரி. சிவனடியான்

★

**சிவகெங்கை:**
பேசுவோர்:
வசனப்பித்தன், மா. பாண்டி
[மாலை 4-மணிக்கு ஊர்வலம்]

★

**விழுப்புரம்:**
தலைவர்: எம். சண்முகம்
பேசுவோர்:
வி. வி. சாமிநாதன்
சிவ. ஔவைதாசன்

★

**பந்தநல்லூர்:**
தலைவர்: வி. ஆர். நாராயணசாமி
பேசுவோர்:
கு இராசமாணிக்கம்
ம. கோ. மணி, கோ. சி. மணி
மாரிமுத்து
[மாலை 4-30 மணிக்கு ஊர்வலம்]

★

**மீமிசல்:**
தலைவர்: கே. கே. நிசாம்தீன்
பேசுவோர்:
ஆ. துரையரசன், அசோகன்
இரா. இராசகோபால்

★

**குமாரக்குறிச்சி:**
பேசுவோர்:
மு. பாண்டியன், நாகலிங்கம்
நித்தியானந்தம், செல்லச்சாமி

★

**நாகை:**
பேசுபவர்: அறிவுடைநம்பி
[மாலை 4-மணிக்கு கே. பாப்பையன் தலைமையில் ஊர்வலம்]

★

**நெடுங்குளம்:**
பேசுவோர்:
ஆறுமுகம், எஸ். முத்துக்கண்
[மாலை 4-மணிக்கு தோழர் எஸ். கன்னையன் தலைமையில் ஊர்வலம் நடைபெறும்.

★

**விருதுநகர்:**
தலைவர்: தானியல்
பேசுவோர்:
டி. ஆர். சுப்பிரமணியம்
எஸ். இரத்தினம்
அரங்கநாதன், சுப்பையா
கே. தேவராசன், எஸ். கணபதி
கே. சுப்பிரமணியம்
மாலை 4 மணிக்கு நாடார் பரிபாலன சங்கக் கட்டிடத்திலிருந்து மாபெரும் ஊர்வலம் புறப்படும்.

## குன்றக்குடி அடிகளார் இந்தியை எதிர்த்துப் பேசுவார்

சிவகங்கை, அக். 11—
**12—10—57** இரவு 8 மணிக்கு சிவகங்கை, நகர தி. மு. கழகச் சார்பில், அரண்மனைவாயில்முன்பு நடைபெறும் இந்தி எதிர்ப்புப் பொதுக் கூட்டத்தில், 'தென்னகத்துக்கு இந்தி பொது மொழியாகத் தகுதியுண்டா?' என்ற பொருள் பற்றி அருட்திரு குன்றக்குடி அடிகளார் பேசுகிறார்.

## இந்தி எதிர்ப்புக் கூட்டம்

13—10—57 காலை 9 மணிக்கு சென்னை 42-வது வட்ட தி. மு. கழகக் கிளை பணிமனையில் தோழர் கே. த. சீனிவாசன் தலைமையில் தோழர்கள் நீலநாராயணன் மு. வரதராசன், இமயவரம்பன், எ. கே. இளஞ்செழியன், க. சண்முகம், எல். கோபால், க. கண்ணன், எ. கே. செல்வம் ஆகியோர் பேசுவர்.

## 'உரிமைக் குரல்' நாடகம்

13—10—57 இரவு 10 மணி அளவில், குடந்தை இராசகோபால் தியேட்டரில் தோழர் காஞ்சி-கல்யாணசுந்தரம் தலைமையில், சத்திரங்கருப்பூர் கலைவாணர் நாடக மன்றத்தாரின் 'உரிமைக் குரல்' (கதை, வசனம்: கதிரவன்) நாடகம் நடைபெறும்.

## பாகிஸ்தான் பிரதமர் பதவியிலிருந்து விலகினார்

பாகிஸ்தான் பிரதமர் சுராவர்த்தி பதவியினின்றும் விலகிக் கொண்டார் என்று பாக். மக்கள் தலைவர் வெளியிட்டுள்ள அரசாங்க அறிக்கை கூறுகிறது.

அடுத்து, பாராளுமன்றத்தில் அதிக ஆதரவுள்ள ரிபப்ளிக் கட்சி பதவிக்கு வரக்கூடும் என்றும், பிரோஸ்கான் நூன் பிரதமராகக் கூடுமென்றும் கருதப்படுகிறது.

## இந்தி எதிர்ப்பு ஊர்வலங்கள்:

சென்னையில்

### 14-வது வட்டம்

13—10—57 காலை 8 மணிக்கு பாரிஸ் வெங்கடாசல ஐயர் தெருவிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, வட்ட முழுமையும் சுற்றி வரும்.

### 28-வது வட்டம்

13—10—57 காலை 10 மணிக்கு பூங்காநகர் மன்னார் தெருவிலிருந்து தோழர் கோ. குருநாதன் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு வட்டத்தின் முக்கிய வீதிகளில் சுற்றிவரும்.

### 29-30-வது வட்டங்கள்

13—10—57 காலை 8 மணிக்கு 30 வட்ட தி. மு. கழகக் கிளை பணிமனையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, 29-30 வது வட்டங்களிலுள்ள பல முக்கிய தெருக்கள் வழியே சென்று, 29-வது வட்டக் கிளை பணிமனையில் முடிவடையும்.

### 44-வது வட்டம்

13—10—57 காலை 8 மணிக்கு ஊர்வலம் அமில்டன் வாராவதி பஸ் நிலையத்திலிருந்து புறப்பட்டு, பஜார் ரோடு, கச்சேரி ரோடு லஸ், டி. எச். ரோடு, வி. பி. கோயில் தெரு, அப்பர்சாமி கோயில் தெரு, முண்டக்கண்ணியம்மன் கோவில் தெரு, காட்டு சுப்பராயமுதலி தெரு வழியாகச் சென்று, கழகப் பணிமனையில் முடிவுறும். இந்தி எதிர்ப்புத் தீர்மானம் நிறைவேற்றப்படும்.

### சென்னை-திருவொற்றியூர்

13—10—57 காலை 8 மணிக்கு திருவொற்றியூர் சன்னதித் தெருவிலிருந்து தோழர் மணிவண்ணன் தலைமையில் ஊர்வலம் புறப்படும்.

# அண்ணா

சுற்றுப்பயணம்

அக்.
13: கோவை
14: ஆனைமலை
வேட்டைக்காரன் புதூர்—மாலை
பொள்ளாச்சி—இரவு
15: கோபிசெட்டிப்பாளையம்
16: சென்னிமலை
20: காஞ்சீபுரம்—கலைக்கழகம்
21: கீழ் எழாச்சூர்
22: கீரனூர்
25: கொருக்குப்பேட்டை
26: சென்னை—மயிலாப்பூர்
27: நாகப்பட்டினம்
29: சென்னை—புரசவாக்கம்
30: கோடம்பாக்கம்
நவ.
1: கூடுவாஞ்சேரி

## க. அன்பழகன்

எம்.எல்.ஏ., சுற்றுப்பயணம்

அக். 12: சிவகாசி
13: தூத்துக்குடி — மாலை 4 மணி: தபால்-தந்தி ஊழியர் வரவேற்புக் கூட்டம்;
5-30 மணி: கழகச் சிறப்புக் கூட்டம்.
14: மாலை — முக்கூடல் உயர்நிலைப் பள்ளிக் கூட்டம்;
இரவு கழகக் கூட்டம்.
15: மதுரை — மாலை 4 மணி: தியாகராயர் கல்லூரி;
மாலை 5-30 மணி: அமெரிக்கன் கல்லூரி.

## மு. கருணாநிதி

சுற்றுப்பயணம்

அக். 12: குன்னூர்
13: திருச்சி—காலை பீடித் தொழிலாளர் மாநாடு
மாலை-இந்தி எதிர்ப்புக் கூட்டம்
15: மாதவரம்
19: மாலை-இளையாங்குடி
20: காலை-வேதாரண்யம் (மாவட்டக் குழுக் கூட்டம்)
மாலை-தோப்புத்துறை
23: இராயப்பேட்டை
27: சேலம்

## சி. பி. சிற்றரசு

சுற்றுப்பயணம்

அக். 13. தூத்துக்குடி
14. நகர் (லால்குடி)
15: கீழ்மத்தூர்
17: பொட்டல்புதூர்
18: உப்பிலியக்குடி
19: சடமங்கலம்
20: திருப்பூர்
21: மேட்டூர் அணை
22: கண்ணமூச்சி
23: பாலைப்பட்டி
24: பழைய ஆயக்குடி
25: கல்லல்
27: சித்தூர்

## என். எஸ். இளங்கோ

சுற்றுப்பயணம்

அக். 13: பாண்டமங்கலம்
14: நங்கவள்ளி
15: கரூர் பகுதி
16: குன்னத்தூர்
17: திருச்செங்கோடு

## கீரனூர் தி. மு. க.—மாணவர் கிளை இந்தி எதிர்ப்புக் கூட்டம்

14—10—57 மாலை 6 மணிக்கு கீரனூர் அண்ணா திடலில் தோழர் ஆ. தமிழ்ச்செல்வன் தலைமையில் தோழர்கள் டி. கே. சீனிவாசன், ப. வே. திருமாவளவன், வி. சா. இளஞ்செழியன், டி. வி. இராமன் மற்றும் பலர் பேசுவர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

